இலங்கையில் 10 சதம் (விமானத் தபால்)

Regd. No. M. 5934

### தெ. ஆ. இந்தியர் தலைவருக்கு 5 ஆண்டு வாய்ப்பூட்டு

ஜோஹன்ஸ்பர்க், மே 15—

தெ. ஆப்ரிக்க இந்தியர் காங்கிரசின் முன்னாள் தலைவர் டாக்டர் யூசுப் முகமது டாடு எந்தக் கூட்டத்திலும் 5 வருஷ காலத்திற்குப் பேசக் கூடாதென்று தெ. ஆப்ரிக்க சர்க்கார் தடை விதித்துள்ளது.

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர். ப. ஜீவானந்தம்

பக்கம் 4 விலை 1 அணா

### சோவியத் சர்க்கார் 1,200 கோடி ரூபிள் கடன் திரட்டுகிறது

புது டெல்லி, மே. 16—

சோவியத் சர்க்கார் 1,200 கோடி ரூபிள் கடன் திரட்டி நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்குச் செலவழிக்கத் திட்டமிட்டிருக்கிறது. இந்தத் தகவலை டாஸ் செய்தி ஸ்தாபனம் வெளியிட்டுள்ளது.

மலர் 13] சென்னை 16-5-57, ஹேவிளம்பி, வைகாசி3-வியாழன் (வெளியூர் 17-5-57, ஹேவிளம்பி, வைகாசி 4 வெள்ளி) [இதழ் 269

# மக்களின் தலைமீது தாங்க முடியாத வரிகள்

## தீப்பெட்டி, புகையிலை, மண்ணெண்ணை, டீ, ரயில்வே கட்டணம், சிமிண்டு, தபால், தந்தி எல்லாவற்றுக்கும் பல மடங்கு வரி

## பணக்காரர்களுக்கு கொசுக்கடிகூட இல்லை

### புதிய பட்ஜெட்டின் சொரூபம்

புதுடில்லி, மே 16—

மத்திய சர்க்காரின் பட்ஜெட் வெளிவந்து விட்டது. பொதுத் தேர்தலுக்குமுன், கடந்த லோகசபை கலையு முன்னால், சாதாரண மக்களைப் பாதிக்கும் புதிய வரிகள் இருக்காது என்று கூறிய அதே நிதிமந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரிதான் 1957-58ம் வருட பெரும்பாலும் சாதாரண மக்களைப் பாதிக்கும் 78 கோடி ரூபாய்க்கு புதிய வரிகளைப் புகுத்தியுள்ளார். இதன்விளைவாக விலைவாசிகளெல்லாம் இன்று முதலே சரேலென்று ஏறிவிட்டன.

சர்க்கரை, காப்பி, டீ, மண்ணெண்ணை, நல்லெண்ணை. தீப்பெட்டி, புகையிலை, தபால் கார்டு, காகிதம், சிமிண்டு, ரயில்வே கட்டணம், பெட்ரோல், உருக்கு, இரும்பு, 90 பொருட்களின் மீது சுங்க வரிஉயர்வு......இவ்விதம் நேரடியாகவும் மறைமுகமாகவும் வரி விதிக்கிருர்கள்.

இவ்வளவு வரிகளைப் போட்டுவிட்டு, நிதி மந்திரி கிருஷ்ணமாச்சாரி நேற்று இரவு ரேடியோவில் பேசுகிருர், "எனது வரவு செலவு திட்டத்தில் பள்ளம்விழாமலிருக்க இருமடங்கு, மும்மடங்கு, நாலு மடங்கு வரிகூட போட்டிருக்கிறேன். இதில் ஏழைகளைப் பெரிய அளவில் பாதிக்கக்கூடிய வரிகளும் உள்ளன. பணக்காரர்களையும் பாதிக்கக்கூடிய வரிகளும் உள்ளன. எல்லோரையும் பாதிக்கக்கூடிய வரிகளும் உள்ளன" என்ருர்.

வரி உயர்வு விபரம் பின்வருமாறு:

#### தீப்பெட்டிக்கு 6 கோடி

60 குச்சி பெட்டி 6 நயேபைசா ஆக உயரும். 40 குச்சி பெட்டி 4 நயே பைசா ஆக உயரும். இதனால் 6 கோடியே 20 லட்ச ரூபாய் சர்க்காருக்கு கிடைக்கும்.

#### மண்ணெண்ணை

6 பாட்டில் கொண்ட 1 காலன் மண்ணெண்ணைக்கு இதுவரை வரி $18\frac{3}{4}$ ந. பை. இனி 20 நயே பைசே.

#### சர்க்கரை 15 கோடி

இதுவரை 111 ராத்தல் கொண்ட ஒரு அந்தர் சர்க்கரைக்கு 5.52 தான் வரி. இனிமேல் 2 மடங்கு வரி. அதாவது ரூ. 11.24 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. இதன்மூலம் 15 கோடியே 55 லக்ஷம் ரூபாய் கிடைக்குமாம்.

#### புகையிலை 6 கோடி

சுருட்டு, சிகரெட்டு தயாரிப்பதற்கான புகையிலைக்கு இதுவரை ராத்தலுக்கு 56 ந. பை. தான் வரி. இனிமேல் 79 ந. பை. பீடி

(2–ம் பக்கம் பார்க்க)

## 14-ல் 8 ராஜ்யங்களில் உணவு பற்ருக்குறை

### உணவு மந்திரியின் தப்புக் கணக்கு

புதுடெல்லி, மே 16—

மக்கள் சபையில் உணவு மந்திரி உணவுப் பிரச்னைபற்றி அட்டகாசமான புள்ளி விபரங்களுடன் பிரசங்கம் அடித்தார். பிரசங்கமுடிவில் ஒரு காங்கிரஸ் உறுப்பினர் மந்திரியின் புள்ளி விபரங்களின் குட்டை உடைத்துவிட்டார்.

14 ராஜ்யங்களில் 8 ராஜ்யங்கள் உத்தரபிரதேசம் போன்ற மிகப் பெரிய ராஜ்யங்கள் உட்பட உணவுப் பற்ருக்குறை ராஜ்யங்களாக இருக்கின்றனவே என்ருர் அவர். உணவுற்பத்தி பொதுவாக அதிகரித்திருக்கிறது என்று கூறுவது இந்த யதார்த்தத்துடன் பொருந்தாதே என்ருர்.

## சாதாரண மக்களின் மீது தாங்க முடியாத புதிய வரி பளு

### புது வரிகளுக்கு பல கட்சித் தலைவர்கள் எதிர்ப்பு

புதுடில்லி, மே. 15—

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைக் காப்பாற்றுவதற்காக சர்க்காரால் பகீரத முயற்சி செய்யப்படுகிறது", என்பதுதான் கட்சி வித்யாசமின்றி பல பார்லிமெண்ட் மெம்பர்களும், புதிய பட்ஜெட் பிரேரணைகளைப்பற்றி அபிப்ராயம் தெரிவித்துள்ளனர், பட்ஜெட் பிரேரணைகளில் மறைமுக வரிகள் பிரதானமாகக் காணப்படுவதால், காங்கிரஸ் எம். பி.க்களும் கூட, இவ்வரிகள் விதிக்கப்படுவது தவிர்க்க முடியாதது என்று கருதினாலும் கூட, இவற்ருல் சாதாரண மக்களின் தலைமீது சுமை அதிகரிக்கப்படுகிறது, என்று அபிப்ராயம் கூறியுள்ளனர்.

ஏழைமக்களின்மீது உள்ளசுமை குறைக்கப்படவில்லை. ஆனால் அதே சமயத்தில் சொத்து வரி, செலவு வரி விதித்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம், என்று கம்யூனிஸ்ட் தலைவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

#### எஸ். ஏ. டாங்கே

இது வயிற்றை இறுக்கிக் கட்டும் சிக்கன பட்ஜெட்; ஆனால் இத்தகைய சிக்கனம் சோஷலிசத்தை நோக்கி அழைத்துச் செல்லுமா என்பது மிகவும் சந்தேகத்திற்குரிய விஷயமே, என்று கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் எஸ். ஏ. டாங்கே குறிப்பிட்டார்.

#### சுசேதா கிருபளானி

இந்த பட்ஜெட்டினால் ஏழை மக்களுக்கு நன்மை ஏற்படுமா என்பது சந்தேகமே என்று காங்கிரஸ் எம்.பி. திருமதி சுசேதா கிருபளானி குறிப்பிட்டார்.

#### சாதன் குப்தா

சாதாரண மக்களின்மீது சுமை நீடிக்கவே செய்கிறது இவற்றின் மத்தியில் சொத்து வரி, செலவு வரிபோன்ற ஒரு சில நல்ல அம்சங்களும் உள்ளன, என்று கம்யூனிஸ்ட் எம்.பி., தோழர் சாதன் குப்தா தெரிவித்தார்.

#### பிராங்க் அந்தோணி

திட்டத்தை அமுல்நடத்த வேண்டும் என்ற கொள்கை சரிதான். ஆனால் நடுத்தர வர்க்கத்தின்மீது விதிக்கப்பட்டுள்ள வரிகளை நான் எதிர்க்கிறேன் என்று, நியமன ஆங்கிலோ–இந்திய அங்கத்தினர் பிராங்க் அந்தோணி தெரிவித்தார்.

#### திருதீப் குமார் சௌத்ரி

வரி விதிப்புப் பிரேரணைகள் பொதுவாகப் பிற்போக்கானவை, என்று புரட்சிகர சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் திருதீப் குமார் சௌத்ரி தெரிவித்தார்.

சாதாரண மனிதன் மீது பெரிய பளு சுமத்தப்படுகிறது என்று கியானி குருமுக்சிங் முசாபிரும், நடுத்தர வர்க்கம் பெரிதும் பாதிக்கப்படுகிறது என்று திரு. பி. பி. ஜுன் ஜுன்வாலாவும் கூறினர்.

## நிலப் பிரச்சினையைத் தீர்க்காமல் உணவு நெருக்கடி தீர்க்கமுடியாது

### கேரளத்தைப் பாருங்கள்!

### ஜனதிபதி உரைமீது ஏ.கே. கோபாலன் பேச்சு

புதுடெல்லி, மே 16—

நிலப்பிரச்சினைக்குச் சரிவரப் பரிகாரம் காணுவதில் சர்க்கார் தவறிவிட்டது. இதன் விளைவாகவே அடிக்கடி உணவு நெருக்கடி ஏற்பட்டு வாதனை செய்கிறது என்று ஜனதிபதி உரையையொட்டி மக்கள்சபையில்நடைபெற்றவிவாதத்தின்போது ஏ.கே. கோபாலன் எம்.பி., கூறினர்.

உணவுப்பிரச்சினைபற்றி அவர் குறிப்பிடுகையில், உணவுப் பொருள் விலையும் நிலப்பரப்பு அதிகரித்திருக்கிறதா? குறைந்துவிட்டதா? என்பதை சர்க்கார் விளக்கவேண்டும் என்று கோரினர்.

நிலவுடைமைக்கு வரம்புகட்டும் விஷயத்தில் சர்க்கார் மிக மிகக் காலதாமதம் செய்கிறது. எனவே பெரிய அளவுக்கு நிலம் வைத்திருப்பவர்களில் பெரும்பாலோர் இப்பொழுதே தமது சொந்த பந்துக்கள் பெயரால் நிலத்தைப் பாகம் பிரித்துக்கொண்டுவிட்டார்கள்.

பின்னால் நிலங்களை பங்கீடு செய்ய தீவிர முயற்சி எடுக்கப்படும்பொழுது வினியோகம் செய்ய நிலம் இல்லாத நிலைமை ஏற்படும் என்று எச்சரித்தார்.

கேரள சர்க்கார் நிலவெளியேற்றத்தைத் தடைசெய்து சட்டம் இயற்றி யிருப்பதை இதர ராஜ்யங்கள் பின்பற்றலாம் என்ருர். கேரளத்தில் உணவு நெருக்கடி அதிகரித்திருக்கிறதெனவும், மத்திய சர்க்கார் உதவி புரிந்து நெருக்கடியை சமாளிக்க முன்வரவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தை சர்க்கார் கைவிடாது,கால வரையறையையும் நீட்டாது என்பதை அறிந்து மகிழ்ச்சியடைவதாக அவர் கூறினர்.

குறைந்த சம்பளம் வாங்கும் சர்க்கார் ஊழியர்களின் சம்பள விகிதங்களைப் பரிசீலனை செய்ய இரண்டாவது சம்பளக் கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்று அவர் வலியுறுத்தினர்.

கோவாப் பிரச்னையில் எதிர்க்கட்சிகளைக் கலந்துகொண்டு நடவடிக்கை எடுப்பதாக பிரதமர் நேரு அளித்திருந்த வாக்குறுதியை நினைவூட்டி இந்த வாக்குறுதியை நிறைவேற்றும் காலம் வந்துவிட்டது" என்று குறிப்பிட்டார்.

#### கிருபளானி

விலைவாசிகள் உயர்வுக்குப் பணவீக்கமே காரணம் என்று கிருபளானி கூறினர். ஐந்தாண்டுத் திட்டம் தேசத்தின் திட்டமா? சர்க்காரின் திட்டமா? காங்கிரஸின் திட்டமா? என்று கேட்டார்.

திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற வேண்டுமானால் ஊழல்களை அடியோடு ஒழித்துத் தீரவேண்டும் என்று அவர் வலியுறுத்தினர்.

உணவு நிலைமைபற்றி சர்க்கார் போட்டுள்ள கணக்குகள் தவருக உள்ளன என்று டாக்டர் ராம் சுவர்சிங் (காங்) கூறினர். பீஹாரில் உணவு நெருக்கடி எற்பட்டதும் நாட்டின் உணவு நிலையே தடுமாறி விட்டது என்ருர். சர்க்கார் இலாகாக்களில் வேலைகள் திறமையாக நடைபெறவில்லை என்று குற்றஞ்சாட்டினர்.

## சோறுபோடு! இல்லையேல் வெளியேறு!

பாட்னு, மே 16—

உணவு நிலைமை கவலைக் கிடமளிக்காது என்று ஜனதிபதி பேசிக்கொண்டிருக்கிற அதே சமயத்தில் சோறு போடு! இல்லையேல் பதவியை விட்டு வெளியேறு! என்ற கோஷம் முழங்க பீஹார் ராஜ்யத்திலுள்ள சந்தால் பங்காருவில் சாகிப் கஞ்ச் சப் டிவிஷனல் ஆபீஸ் முன்னால் விவசாயிகள் பட்டினிப் பட்டாளமாகத் திரண்டு ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

இந்தப் பிரதேசத்தை உடனே பஞ்சப் பிரதேசமாகப் பிரகடனம் செய்ய வேண்டும் எனவும், சர்க்கார் வரிகளை எல்லாம் வஜா செய்ய வேண்டும் என்றும் கோரிக்கை வைத்தனர்.

பட்டினி தாங்க முடியாமல் மக்கள் பரதவிக்கிருர்கள், கால்நடைகளுக்குத் தீவனம் இல்லை என்று சர்க்காரிடம் முறையிடப்பட்டது.

# ஜனசக்தி

சென்னை 16-5-1957


## புதிய ரயில் வரி

எதிர்பார்த்தது போல் பொது மக்களைப் பாதிக்கும் முதல் வரியை மத்திய சர்க்காரின் ரயில்வே மந்திரி அறிவித்துள்ளார்.

இதுவரை ரயில் மூலம் அனுப்பிய சாமான்களுக்கு ரூபாய்க்கு 1 அணா சேர்த்து வசூலித்தது ரயில்வே நிர்வாகம். இன்று இந்த உபரிக் கட்டணத்தை இரண்டணாவாக உயர்த்தியுள்ளார் புதிய ரயில்வே மந்திரி இந்தக் கட்டணம் பருப்பு வகைகள், தீவனம், உரம், கதர், பத்திரிகைகள், காகிதம், புத்தகங்கள் சம்பந்தப்பட்ட வரையில் விதிக்கப்படமாட்டாது என்று அறிவிக்கப்பட்ட போதிலும் இந்தப் புதிய கட்டணத்தால் விலைவாசிகள் உயரத்தான் போகிறது. மேற்கூறிய பொருள்களல்லாது சாதாரண ஜனங்கள் உபயோகிக்கும் பொருள்கள், ஏற்றுமதி இறக்குமதி மூலம் அடைய வேண்டிய அத்தியாவசியப் பொருள்கள் எத்தனையோ உள்ளன. அவைகளெல்லாவற்றிற்கும் இந்த உயர்வு பொருந்துமாதலால் அவைகளை விற்பனை செய்வோர் இன்றைய விலைகளை உயர்த்தப்போகிறார்கள். மக்கள் தலைமேல் மத்திய சர்க்கார் சுமத்தும் முதல் வரிப் பளு இது.

அடுத்தது ரயில்வே பிரயாணிகள் மேலும் கட்டண உயர்வைத் திணிக்கப் போவதாக நிதி மந்திரி அறிவித்து விட்டார். ஏற்கனவே நயா பைசா நாணயத்தின் மூலம் விலைவாசிகள் உயர்ந்துள்ளன. அதனுடன் இத்தகைய புதிய வரிகள் சாதாரண மக்களையே பெரிதும் பாதிக்கப்போகின்றன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற இந்த முறையில்தான் பணம் சேகரிக்கப்படும் என்று காங்கிரஸ் தலைவர்கள் தேர்தல் காலத்தில் சொல்லி இருந்தால் அவர்களது நிலைமை எவ்விதமிருந்திருக்கும் என்பதை இப்பொழுது சொல்லத் தேவையில்லை. மக்களுக்குத் தேனொழுகும் வாக்குறுதிகள் தந்து ஓட்டு வாங்கி ஜெயித்த பின், அடுத்த ஐந்து வருஷங்களில் தம்மை யாராலும் அசைக்க முடியாது என்ற ஆணவத்துடன் காங்கிரஸ் ஆட்சியினர் புதிய வரிகளைத் தைரியமாகப் போட முன் வந்துள்ளனர்.

அரசாங்கத்திற்குத் தேவையான பணத்தைத் திரட்டும் வழி எது, மக்களைப் பாதிக்காமல், வரி கொடுக்கும் சக்தியுள்ளோரிடமிருந்து வசூலிக்கும் வழி எது என்பதை கம்யூனிஸ்டுக் கட்சித் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளது. ரயில்வே நிர்வாகத்தைப் பொறுத்த வரையில் பெரிய அதிகாரிகளுக்குத் தரும் சம்பளத்தைக் குறைப்பது லஞ்ச ஊழலை உறுதியுடன் ஒழிப்பதின் மூலம் எத்தனையோ கோடி ரூபாய்களை சேமிக்க முடியும். இதைச் செய்ய வேண்டுமானால் இன்றைய அரசாங்கம் ரயில்வேயிலுள்ள தொழிலாளர்களை நம்ப வேண்டும், பொது மக்களை நம்ப வேண்டும்.

பொருள்கள் ஏற்றுமதிக்கு அதிகக் கட்டணம் விதிப்பதும், பிரயாணிகள் கட்டணத்தை உயர்த்துவதும் மக்களது வயிற்றில் அடித்து வாழ்வை நாசப் படுத்துவதாகுமே தவிர மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உதவாது. அவர்களது அதிருப்தியையும் ஆவேசத்தையும்தான் வளர்க்கும்.

முதலாளிகளையும், கொள்ளை சம்பளம் வாங்கும் அதிகாரிகளையும் நிலப்பிரபுக்களையும் தேசியத் திட்டங்களை நிறைவேற்ற அதிகப் பணம் தரும்படி வற்புறுத்த இந்திய அரசாங்கம் மறுக்கும் போக்குத்தான் இந்த ரயில்வே பட்ஜெட்டிலும் பிரதிபலிக்கிறது.

இந்திய அரசாங்கத்தின் பொது பட்ஜெட்டின் உண்மை சொரூபம் பற்றி நாளைக்கு எழுதுவோம்.

## தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியன், சேலம்கிளை

சேலம், மே. 15—

தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியனின் சேலம் கிளை மீண்டும் செயல்பட ஆரம்பித்துள்ளது. 10-5-57-ல் நடைபெற்ற ரயில்வே ஊழியர்கள் கூட்டத்தில் தோழர் கே. டி. ராஜு கலந்து கொண்டார். கிளையின் நிர்வாகிகள் பின்வருமாறு: தோழர் கே. பாஸ்கரன் தலைவர், கே. மாரிமுத்து செயலாளர், ஆர். கிருஷ்ணன் (சி.டி.பி.ள்யூ. பிட்டர்) உதவி செயலாளர், நல்லாக்கவுண்டர் பொருளாளர் மற்றும் 6 நிர்வாக உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

11-5-57ல் தோழர் கே. டி. ராஜு திருப்பத்தூர் சென்றார். ரயில்வே தொழிற்சங்க ஊழியர்கள் கூட்டத்தில் பேசினார். லேபர் யூனியன் மீண்டும் செயல்பட ஆரம்பித்ததால் தொழிலாளர்களிடம் அதிக உற்சாகம் காணப்படுகிறது. (ந.கி.)

## அணு ஆயுத சோதனை ஏதிர்ப்பு மகாநாட்டுக்கு ராஜாஜியை அழைக்க முடிவு

### மதுரை நகர சமாதானக் கவுன்சில் தீர்மானம்

மதுரை, மே 13—

மதுரை நகர சமாதானக் கவுன்சில் கூட்டம் மே 4-ந் தேதி 7 மணிக்கு ஸ்டூடன்ட்ஸ் டூடோரியல் கல்லூரி கட்டிடத்தில் நடைபெற்றது. வழக்கறிஞர் தர்மராஜ் சந்தோஷம் தலைமை வகித்தார். நகர சமாதான கவுன்சில் செயலாளர் கவுன்சில் நடவடிக்கைகள் பற்றி அறிக்கை சமர்ப்பித்தார்.

அணு ஆயுத சோதனைகளை எதிர்த்து விரிவான பிரசாரமும் தொடர்ந்து கையெழுத்து இயக்கமும் நடத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இம்மாத இறுதிக்குள் ஸ்ரீ. ராஜாஜியை அழைத்து மதுரையில் அணு ஆயுத பரிசோதனை எதிர்ப்பு மகாநாடு நடத்துவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

பெங்களூரில் 24, 25, 26ம் தேதிகளில் நடைபெறும் அகில இந்திய சமாதானக் கவுன்சிலின் விசேஷ மகாநாட்டிற்கு, கே. கண்ணன், பேராசிரியர் அ. சங்கரநாராயணன், அன்னா எஸ். ரங்கன், ஏ. அருணாசலம், கே. பழனிமலையன், எஸ். காமராஜ், எம். என். ஆதிநாராயணன் முதலியோர் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கொழும்பில் ஜூன் மாதம் 10ம் தேதி முதல் 16ம் தேதி வரை நடைபெறும் உலக சமாதானக் கவுன்சில் கூட்டத்திற்கு டாக்டர் திருஞானம், வழக்கறிஞர்கள், தர்மராஜ் சந்தோஷம், ஆர். மாணிக்கம், கே. கண்ணன், மதுரை நகரசபை உறுப்பினர்கள் எஸ். காமராஜ், அன்னா எஸ். ரங்கன், திரு. அண்ணாமலை, எம். என். ஆதிநாராயணன் முதலியோர் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மதுரை நகர சமாதானக் கவுன்சிலுக்கு, ஸ்ரீ. கே. டி. கே. தங்கமணி எம். பி., பேராசிரியர் ஜி. நாகராஜன், எஸ். வேலாயுதம், இ. பி. அண்ணாமலை, ஸ்ரீ. வெங்கட்ராமன் முதலியோர்கள் புதிய உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

## இ. எம். எஸ். நம்பூதிரிப்பாடுக்கு கேரள சமாஜம் வரவேற்பளிக்கும்

### திரு. காமராஜும் கலந்துகொள்வார்

சென்னை, மே 16—

மே 18-ந் தேதி பிற்பகலில், சென்னை வந்து சேரும் கேரள ராஜ்ய முதன் மந்திரி தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாடுக்கு சென்னை கேரள சமாஜத்தினர் அன்று மாலை ஒரு வரவேற்பு அளிப்பார்கள். இந்த வரவேற்பின்போது திரு. காமராஜ் அவர்களும் கலந்து கொள்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ஜ்வால முகியில் எண்ணெய்ச்செல்வம்

புதுடெல்லி, மே 16—

ஜ்வாலமுகியில் கிடைக்கும் எண்ணெய்ச் செல்வத்தைத் தோண்டி எடுக்க சர்க்கார் பெரு முயற்சி செய்கிறது. ஒரு எண்ணெய்க்கிணற்றைத் தோண்ட ரூ. 40 லட்சம் முதல் ரூ. 60 லட்சம் வரைசெலவாகும் இங்குருமேனிய நிபுணர்கள் கிணறு தோண்டும் வேலைகளைச் செய்துவருகிறார்கள் மந்திரி கே. டி. மாளவியா ராஜ்ய சபையில் கூறினார்.

## ஓட்டு யந்திரத்திற்கு ஆறரை லட்சம் விரயம்

புதுடெல்லி, மே. 16—

மக்கள் சபை, ராஜ்ய சபை இரண்டிலும் தானாகவே இயங்கி ஓட்டுப்பதிவு செய்யும்.

யந்திரங்களைப்பொருத்த ரூ. 6½ லட்சம் செலவாகியுள்ளதாக மந்திரி கே. சி. ரெட்டி கூறினார்.

இந்தத் திட்டம் அமுல் நடத்தும் பொழுது தொடர்ந்து ரூ. 12,000 செலவாகும் என்றார்.

## திருக்கோயிலூர் கிராம அதிகாரிகள் வேலைநிறுத்தம்

திருக்கோயிலூர், மே 16—

திருகோயிலூர் கிராம அதிகாரிகள் நேற்று முதல் வேலைநிறுத்தம் செய்துள்ளனர். ஜில்லா கலெக்டர் ஏற்பாடு செய்திருந்த 'ஜமாபந்தி' (கணக்குகளை சரிபார்ப்பது) கூட்டத்தில் கலந்து கொள்ள மறுத்துவிட்டனர்.

## மக்கள் சபையில் தமிழக தலைவர்கள் முழக்கம்

### கே. டி. கே., பார்வதி கிருஷ்ணன்

புதுடில்லி, மே 16—

எதிர்க்கட்சி அங்கத்தினர்களின் வற்புறுத்தலின்பேரில் தேசத்தின் உணவு நிலைமையைப் பற்றி அறிக்கை வெளியிட உணவு மந்திரி ஸ்ரீ ஏ. பி. ஜெயின் முன் வந்தார்.

ஜனாதிபதியின் பேருரை மீது தமிழ்நாட்டிலிருந்து சென்ற கம்யூனிஸ்ட் எம்.பி.களானதோழர்கள் கே.டி.கே. தங்கமணியும், பார்வதி கிருஷ்ணனும் 6 திருத்தங்கள் கொடுத்திருக்கிறார்கள்.

#### தமிழ்நாடு

அதில் முக்கியமான திருத்தம், சென்னை ராஜ்யத்தின் பெயரை தமிழ்நாடு என்று மாற்ற வேண்டு மென்பது.

#### தோட்டம்

வெள்ளை முதலாளிகளுக்குச் சொந்தமான தோட்டங்களை தேச வுடமையாக்க வேண்டுமென்பது மற்றொரு திருத்தம்.

கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் தோழர் எஸ். ஏ. டாங்கே பிரதான சொற்பொழிவாளராக விளங்கினார்.

## நடக்க இருப்பவை

### பொதுக்கூட்டம்

வேலூர்: வேலூர் நகரதொழிற் சங்கங்களின் சார்பில் 18-5-57ல் பாரக்ஸ் மைதானத்தில் மே தின விழாப் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் கே. டி. ராஜு, வி. கே. கோதண்டராமன் (எம். எல். ஏ.) மற்றும் பலர் பேசுவர்.

●

திண்டுக்கல்: 19-5-57ல் பாரதி படிப்பகத் திறப்பு விழா நடைபெறும். திருவாளர்கள் சா. கணேசன், ப. ஜீவானந்தம், எஸ். டி. பாலு, சுப. அருணாசலம், திருமதி ஆயிஷா பீபி (கேரள எம். எல். ஏ.) ஆகியோர் கலந்து கொள்வர்.

## மக்களின் தலைமீது . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

புகையிலைக்கு 1 ரூபாய் வரி. கட்டுப்புகையிலை, துண்டுப் புகையிலைக்கு அரை ரூபாய் வரி.

புகையிலை வரி அதிகரிப்பின் மூலம் 6 கோடியே 15 லக்ஷம் ரூபாய் கிடைக்கும்.

#### காப்பி, டீ

காப்பிக் கொட்டைக்கு ராத்தலுக்கு இப்போது பதினெட்டே முக்கால் ந. பை.தான் வரி. இனி 35 ந. பை. ஆக உயரும். இதனால் 18 லக்ஷம் ரூபாய் கிடைக்கும்.

இதுவரை தேயிலைக்கு 6¼ ந. பை. ஆக இருந்த வரி, இனி 10 ந. பை. ஆக உயரும். இதனால் ரூ. 2 கோடியே 45லக்ஷம் கிடைக்கும்.

#### காகிதம், பெட்ரோல்

காகித வரி உயர்வு மூலம் ரூ. 2 கோடி கிடைக்கும்.

பெட்ரோல் வரி இப்போது காலனுக்கு 98 ந. பை. இனி 125 ந. பை. இதன்மூலம் ரூ. 6 கோடி 65 லக்ஷம் கிடைக்கும்.

#### வருமான வரி

ரூ 4200க்குமேல் வருஷ வருமானம் உள்ளவர்களுக்கு இதுவரை வருமான வரி வசூலிக்கப்பட்டது. இனி ரூ. 3,000 வருமானமிருந்தாலும் வரி உண்டு. 60,000 வருமானமுள்ளவருக்கு செலவு வரியும் உண்டு.

#### சொத்து வரி

ரூ. 2 லக்ஷம் சொத்துடைய தனி நபருக்கு வரி இல்லை. 3 லக்ஷம் உடைய கூட்டுக் குடும்பத்துக்கும் வரி இல்லை. அதற்கு மேல் 10 லக்ஷம் வரை அரை சதமும், அடுத்த 10 லக்ஷத்துக்கு 1 சதவிகிதமும், அதற்கு மேல் 1½ சதவிகிதமும் வரி விதிக்கப்படும்.

#### ரயில்வே டிக்கட்

30 மைலுக்கு 5 சதவிகிதமும், 30 க்கு மேல் 500 மைல் வரை 15 சதவிகிதமும், அதற்கு மேல் 10 சதவிகிதமும் உயர்த்தப்படும். இதனால் ரூ. 14 கோடி கிடைக்கும்.

#### தந்தி, தபால் வரி

கார்டு விலை இப்போது 5 ந. பை. இனிமேல் 6 ந. பை. லோக்கல் கார்டு 3 ந. பையிலிருந்து 4 ந. பை. ஆகும். ரிப்ளை கார்டு 6 ந. பையிலிருந்து 8 ந. பை. ஆகும். வெளியூர் ரிப்ளை கார்டு 10 ந.பை. யிலிருந்து 12 ந. பை. ஆகும். தந்தி கட்டணமும்அதிகமாகிறது.

#### சிமிண்டு

1 டன் சிமிண்டுக்கு இப்போது ரூ. 5 வரி, இது 4 மடங்கு, அதாவது 20 ரூபாயாக உயரும்.

மற்றும் உப்பு போன்ற பல வேறு பொருள்களின் மீதும் வரி போடப்பட்டிருக்கிறது. மொத்தம் 78 கோடி ரூபாய்க்கு வரி போடப்பட்டிருக்கிறது. என்னால் எவ்வளவு வரி போட முடியுமோ அவ்வளவு வரி போட்டுவிட்டேன் என்று டி. டி. கே. கூறுமளவுக்கு, அதாவது பொதுமக்களின் முதுகு முறியுமளவுக்கு வரிபோடப்பட்டு விட்டது.

# மூடிய தொழிற்சாலைகள் திறக்கப்படுகின்றன கேரளத்தில்

# ஓடிய தொழிற்சாலைகள் மூடப்படுகின்றன தமிழ்நாட்டில்

## வேலூரில் மேதின விழாவில்

## கோதண்டராமன் எம்.எல்.ஏ.பேச்சு

வேலூர், மே. 13—

சென்ற 11-ம் தேதி வேலூர் காகிதப் பட்டறையில் மே தின விழா சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. நானாவித வாத்தியங்கள் முழங்க மாலையில் ஒரு ஊர்வலம் நடைபெற்றது.

பின்னர் 7 மணிக்கு பொதுக் கூட்டம் நடைபெற்றது முதலில் தோழர்கள் கே. ஆர். சுந்தரம், வி. கண்ணன் முதலியோர் பேசினர். தோழர் வி. எஸ். கிருஷ்ணன் தலைமை வகித்தார்.

### அங்கும்-இங்கும்

இறுதியாக தோழர் வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ., மே தின வரலாற்றைப் பற்றி எடுத்துரைத்து, கேரளத்தில் அமைந்துள்ள, விவசாயி தொழிலாளிகளின் சர்க்கார் செய்துவரும் சாதனைகளை விளக்கினார்.

கேரளத்தில் முன்பு காங்கிரஸ் ஆட்சியில் மூடப்பட்ட நூற்றுக்கதிகமான தொழிற்சாலைகளைத் திறக்க வைத்து பல்லாயிரக்கணக்கானத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுத்துள்ளனர்.

ஆனால் இங்கோ காமராஜர் ஆட்சியிலோ தினம் தினம் தொழிற்சாலைகள் மூடப்பட்டு வருகின்றன என்றார்.

### உதாரணம் வேண்டுமா?

இதற்கு உதாரணம் வேண்டுமா? காட்பாடி சுதர்சன் ஆயில் மில் சர்க்கார் ரூ. 10 லட்சம் கடன் கொடுத்து கட்டப்பட்டது. இத்தகைய மில் இன்று மூடப் பட்டுவிட்டது. இன்னும் குடியாத்தம் பட்டு மில், மேல்பட்டி சர்க்கரை ஆலை மற்றும் தமிழ்நாடெங்கும் ஏராளமான தொழிற்சாலைகள் ஒன்றன்பின் ஒன்றாக மூடப்பட்டு வருகின்றன.

இவற்றைத் திறப்பதற்கான முயற்சி எதையும் சர்க்கார் செய்வதாக இல்லை. இத்தகைய போக்கை இந்த காங்கிரஸ் சர்க்கார் அனுஷ்டித்தால் எப்படி தொழில் வளர்ச்சி ஏற்படும்? எப்படி வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியும் என்றார்.

### 'யு' நாமம் 'ஒய்' நாமம்

10 வருட சுதந்திர ஆட்சியில் நமது மாகாண காங்கிரஸ் சர்க்கார் தொழிலாளர், விவசாய, மத்தியதர மக்களுக்காக உருப்படியான சட்டங்கள் எதுவும் கொண்டுவரவில்லை. அப்படி ஏதாவது ஒன்று இரண்டு சட்டங்கள் கொண்டுவந்தாலும் அது யானைக்கு நாமம் போட்ட கதையாக இருக்கிறது என்று கூறி அந்த நாமக் கதையை விளக்கினார்.

ஒரு பெருமாள் கோவில்யானை. அதற்கு 'ஒய்' (Y) நாமம் போடவேண்டுமென்று ஒரு கோஷ்டி. இல்லை, அது கூடாது, 'யு' (U) நாமம்தான் போடவேண்டும் என்று இன்னொரு கோஷ்டி. இந்த சச்சரவு முற்றி உயர்நீதி மன்றத்திற்கு சென்றது. அங்கு 'ஒய்' நாமக்காரர்கள் வெற்றி அடைந்தனர்.

ஆனால் இந்தத் தீர்ப்பின்படி யானைக்கு நாமம்போட அவர்கள் வந்தபோது அதை 'யு' நாமக்காரர்கள் தடுத்தனர். 'ஒய்' நாமத்தை யானையின் முகத்தில் போடுவதா, வாலில் போடுவதா என்று நீதிமன்றத் தீர்ப்பில் விளக்கமாகக் கூறப்படவில்லை என்பது அவர்கள் ஆட்சேபம் ஆகவே, வழக்கு மீண்டும் நீதிமன்றத்திற்கு சென்றது. ஆனால் இந்த வழக்கு முடிவதற்குள் யானை 'குளோஸ்' ஆகிவிட்டது.

இந்த மாதிரிதான் சர்க்கார் கொண்டுவரும் சட்டங்களிலுள்ள ஓட்டைகளைப் பயன்படுத்திக் கொண்டு முதலாளிகளும், நிலப் பிரபுக்களும் ஹை கோர்ட், சுப்ரீம் கோர்ட் என்று செல்கின்றனர். இந்த வழக்குகள் முடிவடைந்து மக்களுக்கு நன்மை கிடைப்பதற்குள் தொழிலாளர்களும், விவசாயிகளும், மத்தியதர மக்களும் செத்து சுண்ணும்பாக வேண்டியதுதான் என்றார்.

### நாங்குனேரியில்

நாங்குனேரி, மே 11—

நாங்குனேரியில் மே தினம் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கொண்டாடப்பட்டது. கட்சி அலுவலகம் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. இரவு 8 மணிக்கு பி. வைகுண்டம் தலைமையில் நடைபெற்றப் பொதுக் கூட்டத்தில் ந. நடராஜன், முத்துமாணிக்கம், வேலாயுதம், காந்தி முதலியோர் பேசினர்.

### பள்ளிப்பட்டி

பள்ளிப்பட்டி, மே 13—

பி. பள்ளிப்பட்டியில் மே தினம் தாரை தப்பட்டை, களியாட்டங்களோடு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இதனையொட்டி நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் எம். ரத்தினம், சின்னச்சாமி, பி. பி. ராஜு, வட ஆற்காடு மாவட்டத் தொழிற் சங்கத் தலைவர் வழக்கறிஞர் ஏ. கே. தண்டபாணி எம்.ஏ.பி.எல்., முதலியோர் பேசினர். திரளான மக்கள் வந்திருந்தனர்.

### தொட்டம்பட்டி

தொட்டம்பட்டி, மே 10—

மேதினத்தை ஒட்டி சென்ற 2ம் தேதி தொட்டம்பட்டியில் சி. பி. திருமலைக் கவுண்டர் தலைமையில் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றது. தோழர்கள் கே. ஏ. பழனி, கணேசன், ஏ. முனுசாமி, வேடியப்பன், நஞ்சப்பன் பேசினர்.

### வெள்ளியம்பாளையம்

வெள்ளியம்பாளையம், மே 15—

வெள்ளியம்பாளையம் முற்போக்கு வாலிபர் சங்க சார்பில் குறவன் குறத்தி வேஷங்களுடனும், மேளதாளங்களுடனும் மே தினம் சென்ற 3ம் தேதி உற்சாகமாகக் கொண்டாடப்பட்டது சிறுவர் சிறுமிகளுக்குப் போட்டிகள் நடத்தப்பட்டன. அன்று மாலை தோழர் அப்துல்லா தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பலர் பேசினர்.

### அரூர்

அரூர், மே 11—

அரூர் நகரத்தில் 7ம் தேதி தோழர் எஸ். பூசாமி தலைமையில் மே தினப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. முன்னதாக ஊர்வலமும் நடைபெற்றது. கூட்டத்தில் கே. செல்வராஜ், ஏ. முனுசாமி, சடையப்பன் பேசினர்.

### மேட்டூர் அணை

மேட்டூர், மே 15—

மே 1-ம் தேதியன்று மேட்டூர் நன்கு அலங்கரிக்கப்பட்டு கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. நகரின் பல பகுதிகளின் கொடி ஏற்று விழாக்கள் நடைபெற்றன. சின்னு பயில்வான் சிஷ்யர்கள் சிலம்பு, தீப்பந்தம் போன்ற விளையாட்டுகள் விளையாடி காண்பித்தனர்.

மாலை கருமலைக்கூடலில் எஸ். கே. செல்லப்பன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் கே. பி. தங்கவேலு, எம். சிரங்கன், எம். எஸ். பெருமாள், கே.எஸ். முத்துசாமி, கே. ஆர். பொன்னுசாமி முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

### குளித்தலை

குளித்தலை மே 21—

மே தினத்தை ஒட்டி குளித்தலையில் பல இடங்களில் கொடியேற்று விழாக்கள் நடைபெற்றன. இந்த விழாக்களில் தோழர்கள் சம்பந்தம், ஆர். கருப்பையா ஆகியோர் பேசினர்.

### உடையாம்பாளையம்

உடையாம்பாளையம், மே 13—

உடையாம்பாளையத்தில் 1-ம் தேதி மே தினம் வீமரிசையாக நடைபெற்றது. ஆயிரம் பேர்களுக்கு கஞ்சி வழங்கப்பட்டது. காட்டூர் வாள் பயிற்சி மன்றத்தாரால் பல வேடிக்கைகள் செய்து காட்டப்பட்டன. மாலையில் ஏ. சி. ராமதாஸ் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் எஸ். அப்பு, வெங்கிடு முதலியோர் பேசினர். கூட்டத்திற்கு 2 ஆயிரத்துக்கு அதிகமான மக்கள் வந்திருந்தனர்.

### தாராவி

பம்பாய், மே 15—

பம்பாய் தாராவியில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மேதினம் கொண்டாடப்பட்டது. பம்பாய் ரேஷிம்மஸ்தூர் யூனியன்பொதுச் செயலாளர் பி. கே. குர்னே செங்கொடி ஏற்றி பேசினர். மற்றும் தோழர்கள் எம். ராஜு, எம். கே. சந்தான ராஜ் ஆகியோரும் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

### தங்கவயல்

ஆண்டர்ஸன்பேட்டை, மே 11—

தங்கவயலில் மைசூர் மைன், சாம்பியன், ஆஸ்பத்திரி, யூனியன் கட்டிடங்கள் மே தினத்தையொட்டி சிறப்பாக அலங்காரம் செய்யப் பட்டிருந்தன. ஏராளமான தொழிலாளர்களின் வீடுகளில் செங்கொடிகள் கம்பீரமாகப் பறந்தன.

சாம்பியன் 'இ' பிளாக்கில் கோபால் உடற் பயிற்சிக் குழுவினர் பாரம் தூக்குதல், தசைகளை இயக்கிக் காட்டுதல் முதலிய வேடிக்கைகளை செய்துகாட்டினார்கள். சின்னதுரை, கோபால், பட்டம்மா ஆகியோர் அபூர்வ வேலைகள் செய்தனர். சாம்பியன் தொழிற் சங்கக் காரியாலய எதிரில் பி. ராமமூர்த்தி முன்னிலையில் திரு. தானமுத்து, ராஜா முதலியோர் உடற்பயிற்சி வேலைகள் செய்து காட்டினர்.

பின்னர் இரவு 7 மணிக்கு இராபர்ட்சன் பேட்டை ஹைஸ்கூல் மைதானத்தில் தோழர்கள் எம். கோவிந்தன் தலைமையில் பிரம்மாண்டமான பொதுக் கூட்டம் நடைபெற்றது. கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் பி. ராமமூர்த்தி விரிவாகப் பேசினார்.

மே தினத்தை ஒட்டி பல இடங்களில் ஆர். கோவிந்தசாமி குழுவினரின் கலா நிகழ்ச்சி நடத்தினர்.

### பொய்சர்

பம்பாய், மே 15—

பம்பாய் பொய்சரில் ஜனநாயக வாலிபர் சங்கத்தினர் மே தினத்தைக் கோலாகலமாகக் கொண்டாடினர். என். எம். செல்லையா தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் நடராஜன், கந்தசாமி, கருப்பையா, மீரா குப்தா முதலியோர் பேசினர்.

பம்பாய் தாணா மாவட்டத்தைச் சேர்ந்த மஜ்வாடா என்னும் சிற்றூரில் கே. எஸ். பாண்டியன் தலைமையில் மே தின விழாப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. டி. பி. செல்லையா, என். அபூர்வம் மைக்கேல் முதலியோர் பேசினர்.

### பத்ராவதி

பத்ராவதி, மே 11—

பத்ராவதியில் கம்யூனிஸ்ட் கட்சியால் மே தினம் குதூகலமாகக் கொண்டாடப்பட்டது. 25 இடங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டதோடு, சைக்கிள் ஊர்வலமும் நடைபெற்றது. அன்று மாலை தோழர் சந்துகுட்டி தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பெங்களூர் தோழர் ராமராவ், வெங்கடப்பா, நடராஜன், கோவிந்தசாமி, சூரியநாராயண ராவ், மஸ்தான் முதலியோர் பேசினர்.

## தமிழகம் முழுவதும் கேரள விழாக்கள்

சென்னை, மே 14—

கேரள சர்க்காரின் சாதனைகளைக் கண்டு தமிழகம் ஆச்சரியத்தில் ஆழ்ந்திருக்கிறது. அந்த சர்க்கார் மேலும் மேலும் வலுவடைந்து, மேலும் மேலும் மக்களுக்கு நன்மைகள் புரியவேண்டுமென்று தமிழ்நாடு முழுவதும் வாழ்த்துவிழாக் கொண்டாடினார்கள். எங்கும் ஊர்வலங்கள்! வாணவேடிக்கைகள்! இனிப்பு வழங்கல்! கிராமிய ஆட்டங்கள்! பொதுக்கூட்டங்கள்! தீர்மானங்கள்!

### எத்தனை ஊர்களில்?

தென் திருப்பேரையில் யானை மீது செங்கொடிதாங்கி ஊர்வலம் நடந்தபின், தோழர் ஹரி தலைமையில் கேரள விழா கொண்டாடப்பட்டது. குரிச்சிபுத்தூரில் ஜீவா வாலிபர் சங்கம் முக்கோணம் கம்யூனிஸ்டு கட்சி, கண்டரமாணிக்கம், பாளையங்கோட்டை, குனியமுத்தூர், இராஜபாளையம், திண்டிவனம், சீர்காழி தாலூகா அருகூர், கடலூர், அரக்கோணம், தர்மபுரி, எடினேஸ்வரம், கோவில்பட்டி தாலூகா அச்சங்குளம், சாத்தூர், கோவை கண்ணம்பிரான் மில் தொழிலாளர், வெள்ளியம்பாளையம், திருச்செந்தூர் தாலூகா உடன்குடி, ஆனைக்கூட்டம், புதுக்கோட்டை, நமணசமுத்திரம், சாத்தூர் தாலூகா நாரணபுரம், செங்கமலப்பட்டி, சிவகாசி, முகவூர், பண்ணைப்புரம், வெள்ளலூர், சிவகிரி, மாதவரம், திருக்கோவிலூர், பெரிய குளம், ஈரோடு வழி கவுந்தப்பாடி, குடந்தை, ஐம்பையில் 5 மைல் தூர ஊர்வலம், திருக்கோஷ்டியூர் வட்டாரத்தில் கத்தாளம் பட்டு, நரியங்குடி, மு. புதூர், தரியம்பட்டி, கொளஞ்சிப்பட்டி, காட்டாம்பூர், சோலையாம்பட்டி, காவேரி நகரையடுத்துள்ள செம்பட்டூர், கீரனூர், நாகைத் தாலூகா கோவில் கடம்பனூர், திருப்பூர் பனியன் பேக்டரி தொழிலாளர் சங்கம், திண்டுக்கல், நாகல் நகர், நெல்லிக்குப்பம்......இப்படியாக நூற்றுக்கணக்கான ஊர்களிலிருந்து கேரள தினம் கொண்டாடப்பட்டிருக்கிறது. செய்திகள் வந்து குவிந்துள்ளன.

## இலவச மாணவர் விடுதி

சென்னை, மே 14—

சென்னை, கொருக்குப்பேட்டை, காக்ரேன் பேசின் ரோடு 18, என்னுள்ள கட்டத்தில் ராவ்சாகிப் வி. தருமலிங்கம் பிள்ளை நினைவு மாணவ விடுதி, தாழ்த்தப்பட்ட மாணவர்களின் நலன் கருதி 1945-ம் ஆண்டு முதல் நல்ல முறையில் நடந்து வருகிறது. சுமார் 200 ஏழை மாணவர்கள் கல்வி பயின்றும் இலவச உணவு பராமரிப்பு முதலியவை பெற்றும் தேர்வுபெற்ற மாணவர்கள் கல்லூரி படிப்பிற்கும், உத்தியோகங்களுக்கும், தொழில் ஸ்தாபனங்களுக்கும் அனுப்பப்பட்டும் பனிரண்டு ஆண்டுகளாக பணியாற்றி வருகிறது. இவ்விடுதியில் ஏழை பிற்பட்ட மாணவர்களும் ஏனைய இன மாணவர்களும் சுமார் 10 பேர்களும், 150 தாழ்த்தப்பட்ட எல்லா சலுகையும் பெற்று முன்னேற்றமடைந்து வருவது குறிப்பிடத் தக்கது.

1957-வது கோடைகால விடுமுறைக்குப் பின் மேற்படி விடுதி 15-6-57ல் திறக்கப்படும்.

எனவே புதிதாக சேர விரும்பும் மாணவர்கள் 30-5-1957 தேதிக்குள் மேற்படி விடுதி காப்பாளருக்கு மாணவர் விலாசம் இட்ட தபால் கவருடன் மனு செய்துகொள்ளவேண்டுமென்று விடுதி காப்பாளர் ஒரு அறிக்கையில் கூறுகிறார்.

விலாசம், ராவ்சாகிப் வி. தர்மலிங்கம் பிள்ளை நினைவு மாணவர் விடுதி, 18, காக்ரேன் பேசின் ரோட், சென்னை 31.

## விவசாய சங்க தலையீட்டால் குத்தகை தள்ளுபடி செய்யப்பட்டது

உடுமலை, மே 11—

உடுமலை தாலூகா மடத்துக் குளம் (பி. டபுள்யூ டி) பங்களாவில் 26-4-57ல் உடுமலை தாலூகா தாசில்தார் தலைமையில் மடத்துக் குளம் பிர்கா விவசாய சங்கப் பிரதிநிதிகளும், மிராஸ்தார்களும் சேர்ந்து குத்தகை தள்ளுபடிக் காக கூட்டம் நடத்தினர். 1956ம் வருடத்திய நியாயவாரச் சட்டப்படி 60-40 பங்கை வாங்க மிராசுதார்கள் மறுத்ததின் காரணமாக மடத்துக்குளம் பிர்கா விவசாயிகள் சங்கம் பல தடவை தாசில்தார், சப்-கலெக்டர் அவர்களிடம் நேரில் விவசாயிகளைக் கூட்டிக் கொண்டுபோய் நிலைமையை விளக்கியது. இதன்பேரில் தாசில்தார் 500 பேர் அடங்கிய கூட்டத்தில் அடியிற் கண்டவாறு குத்தகை குறைப்பு (தள்ளுபடி) மடத்துக்குளம் பிர்கா இருபோக நஞ்சை நிலத்திற்கும், ஒருபோக நஞ்சை நிலத்திற்கும் பைசல்செய்து முடிவு செய்யப் பட்டது.

| | | | |
|---|---|---|---|
| 1. | கடத்தூர் தலைப்பத்து வயலுக்கு சலகை 1க்கு | 14 | வள்ளம் |
| | ஷெ டியூர் கீழ்பத்து வயலுக்கு ,, | 15 | ,, |
| 2. | கணியூர் கரவளிக்கு சலகை 1-க்கு | 10 | ,, |
| 3. | சோளமாதேவி கரவளிக்கு சலகை 1க்கு | 10 | ,, |
| 4. | மடத்துக்குளம் கரவளிக்கு சலகை 1க்கு | 13 | ,, |
| 5. | கொமரலிங்கம் வயலுக்கு சலகை 1க்கு | 9 | ,, |
| | ஷெ டியூர் கோடை வயலுக்கு சலகை 1-க்கு | 10 | ,, |
| | ஷெ டியூர் எட்டாபத்து வயலுக்கு சலகை 1க்கு | 10 | ,, |

என்று குத்தகை தள்ளுபடி செய்யப்பட்டது.

# கேரளாவில் புரட்சிகர கல்வி சீர்திருத்தங்கள்

## சர்க்கார் தயாரித்துள்ள புதிய மசோதா

### கல்வித்துறை சீர்படுவதில் மக்களுக்கும் பங்கு

திருவனந்தபுரம், மே. 14— புரட்சிகரமான கல்வி சீர்திருத்தங்களுக்கு வழிகோலும் மசோதா ஒன்றை கேரள சர்க்கார் தயாரித்து வருகின்றனர். இந்த மசோதா வருகிற வரவு செலவு கூட்டத்தில் கொண்டு வரப்படும்.

இந்த மசோதாவின் பிரகாரம், தனிப்பட்டோர் நடத்தும் பள்ளிகளில் ஒழுங்கீனங்கள் நடப்பதாக நிரூபிக்கப்பட்டால், அந்தப் பள்ளிகளை நஷ்ட ஈடுயின்றி எடுத்துக்கொள்ள சர்க்காருக்கு அதிகாரம் கொடுக்கப்படுகிறது.

**ராஜ்ய கல்வி போர்ட்**

மேலும், பிராந்திய கல்வி 'கவுன்ஸில்'களும், ராஜ்ய கல்வி 'போர்டும்' அமைக்கவும் இந்த மசோதாவில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. பிரதேசக் கவுன்ஸில்கள் அந்தந்த ஜில்லாவிலுள்ள பள்ளிகளின் நிர்வாகத்தைக் கண்காணிக்கும். ராஜ்ய கல்வி போர்ட் கல்வி கொள்கைகளை வகுக்கும்.

**ஆசிரியர்களும் இடம் பெறுவர்**

7 ஜில்லாக்களில் அமைக்கப்படும் ஒவ்வொரு பிரதேசக் கவுன்ஸிலிலும் 10 முதல் 12 அங்கத்தினர்கள் இருப்பார்கள். இவர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். மற்றும் சிலர் நியமிக்கப்படுவார்கள். இந்தக் கவுன்ஸில்களில் சட்டசபை அங்கத்தினர்களும், ஆசிரியர்களின் பிரதிநிதிகளும் இடம் பெறுவர்.

கல்வித் துறையில் கொள்கை வகுக்கும் அதிகாரம் கல்வி போர்டுக்கு இருக்கும். கல்வி அமைச்சரை தலைவராகக் கொண்ட இந்த போர்டில் கல்வியாளர்கள் அங்கத்தினர்களாக இருப்பார்கள். கல்வி இலாகா டைரக்டர் பிரதான நிர்வாக அதிகாரியாக இந்த போர்டில் இணைக்கப்பட்டிருப்பார்.

**இதர அம்சங்கள்**

இந்த மசோதாவில் உள்ள மற்றொரு முக்கிய அம்சம் கல்வி இலாகாவின் அதிகாரங்கள் பரவலாக்கப்படும். தவிரவும், ஆசிரியர்களுக்கு வேலை உத்திரவாதம் முதலிய உரிமைகளும் நிலைநாட்டப்படும். பென்ஷன் திட்டத்தின் கீழ் தனிப் போர்டார் நடத்தும் பள்ளி ஆசிரியர்களும் சேர்த்துக்கொள்ளப்படுவர்.

**சர்வகலாசாலை மசோதா**

இதைத் தவிர கேரள சர்க்கார் சர்வகலாசாலை மசோதா ஒன்றையும் தயாரித்துள்ளது. இந்த மசோதாவின்படி, தற்போது திருவாங்கூர் சர்வகலாசாலையின் நிர்வாகத்தின்கீழ் இருக்கும் எல்லா கல்லூரிகளது நிர்வாகத்தையும் சர்க்கார் ஏற்று நடத்தும். அதோடு திருவாங்கூர் சர்வகலாசாலை என்பது கேரள சர்வகலாசாலை என்று மாற்றப்படும்.

# பார்வை இழந்த சகலருக்கும் ரயில் பிரயாண சலுகை

## க்ஷயரோகிகளுக்கும் புதிய சலுகையில் பலன் கிடைக்கும்

புதுடெல்லி, மே 15— குருடர்களைத் துணைஆள் ஒருவருடன் ஒரே ஒரு டிக்கெட்டில் பிரயாணம் செய்வதற்கு இந்திய ரயில்வேக்கள் அனுமதிக்கும் மென்று யூனியன் ரயில்வே மந்திரி ஸ்ரீ ஜகஜீவன்ராம் லோக்சபாவில் நேற்று ரயில்வே பட்ஜெட்டைச் சமர்ப்பித்து பிரசங்கம் செய்கையில் அறிவித்தார். இச்சலுகை தேசத்திலுள்ள சகல குருடர்களுக்கும் அனுமதிக்கப்படும்.

தற்போது இந்தச் சலுகை அங்கீகாரமான ஸ்தாபனங்களில் பராமரிப்பிலுள்ள குருடர்களுக்கு மாத்திரமே பிரயோகமாகிறது.

இதுபோன்ற சலுகை க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டிருப்பவர்களுக்கும் விஸ்தரிக்கப்படுகிறதென்றும், அவர்கள் ஆஸ்பத்திரிகள் அல்லது சுகாஸ்ரமங்கள் ஆகியவைகளில் சேர்வதற்காகப் போகும்போதும் அவைகளிலிருந்து விடுவிக்கப்பட்டுத் திரும்பும்போதும் இச்சலுகை கிடைக்கும்.

ஆனால் இதற்குரிய அத்தாட்சிப் பத்திரங்களை அவர்கள் காட்டுவதன் பேரில்தான் இச்சலுகை அளிக்கப்படும்.

பொதுவாக ரயில்வே சலுகைகள்பற்றி மந்திரி பின்வருமாறு கூறினார். "இப்போது நிலவி வருகிற ரயில் நெருக்கடிச் சூழ்நிலையிலும், அதிக வருமானத்தைத் தேடிக்கொள்ள வேண்டியிருக்கும் நிலைமையிலும் பிரயாணிகள் போக்குவரத்து விஷயத்தில்அளிக்கப்படுகிற சலுகைகளைக் குறைக்க வேண்டும் அல்லது வாபஸ்பெற வேண்டுமென்று இந்தச் சபையிலும் இதர இடங்களிலும் வற்புறுத்தப்பட்டு வந்தபோதிலும், இப்போது இருந்துவருகிற எந்தச் சலுகையையும் நான் ரத்துசெய்ய தற்போது உத்தேசிக்கவில்லை."

# கேரள கம்யூனிஸ்ட் அரசாங்கம்

## நாட்டிற்கு நல்லது செய்யும்

### கிறிஸ்தவப் பாதிரியார் எழுதிய கடிதம்

திருச்சூர், மே 14— 'உத்தர கேரள சபா மித்திரம்' என்ற பெயரில் பிரசுரமாகும் மாதப் பத்திரிகையின் மே இதழுக்கு பிஷப் (பாதிரியார்) ஒரு கடிதம் எழுதியுள்ளார். அதில் கேரள ராஜ்ய கம்யூனிஸ்ட் சர்க்கார் பற்றி அவர் குறிப்பிட்டுள்ளதாவது:

"இந்தியாவில் கம்யூனிஸ்ட் ஆட்சியின்கீழ் வந்துள்ள முதல் மாகாணம் கேரளம். சரியான தேர்தல் முடிந்து ஓட்டுப்பெட்டி மூலம் அதிகாரம் ஏற்றெடுத்துள்ளது இந்த சர்க்கார். எனவே இன்று உலகத்தின் கண்கள் கேரளத்தை நோக்கித் திரும்பியுள்ளன."

"பதினோரு பேர்கொண்ட மந்திரி சபையில் அறிவாற்றல், திறமை, தியாக பூர்வமான வாழ்க்கை, நற்பண்பு இவை ஒருங்கே கொண்டவர்கள் இருக்கின்றனர். எவரும் மதிக்கும் தலைசிறந்தவர்கள் இருக்கின்றனர்."

"எனவே முன்கூட்டியே தீர்ப்புக்கூறிவிடாமல் நாட்டில் நன்மை ஏற்படும் செல்வமும் செழுமையும் பெருகும் என்ற நம்பிக்கையுடன் நாமபொறுமையாகக் காத்திருப்போமாக" என்று அக்கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

# கேரள கம்யூனிஸ்டு அரசாங்கத்தின் சாதனைகள்

(1) காந்திஜியின் கருத்துப்படி அமைச்சர்களின் சம்பளம் ரூ. 500 ஆகக் குறைக்கப்பட்டது. பல அமைச்சர்கள் ரூ. 350தான் எடுத்துக்கொள்வர்.

(2) அரசியல் கைதிகளை விடுவித்தனர். பலரது மரணதண்டனை ரத்தாயிற்று. கைதிகளுக்கு 18 அவுன்ஸ் தினசரி உணவு.

(3) மலையாள மொழியை ஆட்சி மொழியாக்கினர்.

(4) என். ஜி. ஓ.க்கள் சம்பளம் உயர்ந்தது.

(5) கிராம அதிகாரிகள் சம்பளம் ரூ. 32-லிருந்து ரூ. 52 ஆக உயர்ந்தது.

(6) ஆரம்ப ஆசிரியர்களுக்கு வேலை உத்தரவாதம், பென்ஷன் கிடைத்தன.

(7) நிலவெளியேற்றம், குடியிருப்பு மனைக்கட்டிலிருந்து வெளியேற்றுவது தடைசெய்யப்பட்டது.

(8) மூடிக்கிடந்த முந்திரித் தொழில்களைத் திறந்து 60 ஆயிரம் பேருக்கு வேலை கொடுக்கப்பட்டது.

(9) சர்க்கார் நடத்தும் தொழிற்சாலையிலுள்ள தொழிலாளருக்கு பஞ்சப்படி உயர்ந்தது.

(10) 500 வீடுகளுக்கு ஒரு உணவு தான்ய நியாயவிலைக் கடை. இவைகளைக் கண்காணிக்க சர்வகட்சி கமிட்டிகள் நியமனம்.

(11) உணவு, மோட்டார் ரகத் துணிகளுக்கு விற்பனை வரி ரத்து.

(12) தொழில்களைத் திறம்பட நடத்த தொழிலாளர் பிரதிநிதிகள்—அதிகாரிகள் கூட்டுக்கமிட்டிகள் நியமனம்.

(13) மே தினத்திற்கு சம்பளத்துடன் விடுமுறை.

(14) ரூ. 60 வாடகைதரும் மதிப்புள்ள வீடுகளுக்கு வீட்டு வரி இல்லை.

(15) ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அதிக அதிகாரம் வழங்கப்படும்.

(16) தொழிற்சங்கங்களின் மனுக்களுக்கு ரூ. 2 ஸ்டாம்பு ஒட்டுவது ரத்து. பல தொழில் தகராறுகள் தீர்க்கப்பட்டன.

(17) 44 ஹைஸ்கூல்கள் இவ்வாண்டில் திறக்க ஜில்லா போர்டிற்கும் தனிநபர்களுக்கும் அனுமதி.

(18) ரூ. 50 ஆயிரம் மதிப்புள்ள மில்லை ரூ. 3 லட்சத்திற்கு கவர்னர் வாங்க முடிவுசெய்தது ரத்து. இதுபோன்ற பல ஊழல்கள் தடுக்கப்பட்டன.

(19) சிறுபான்மையினரான முஸ்லீம்களுக்கு மசூதி கட்டிக் கொள்ளும் உரிமை அளித்ததுள்பட சகல மதசுதந்திரமும் நடைமுறையில் உத்தரவாதம்.

குறிப்பு: இதுவரை கேரள ஆட்சி சாதித்த சாதனைகள் பலவற்றில் இவை முக்கியமானவை. நிலஉடமைக்கு வரம்பு கட்டுதல், உபரி நிலம், தரிசு நிலத்தை நிலமில்லாதோருக்குப் பகிர்ந்தளித்தல், அன்னியத் தோட்டங்களைத் தேசியமயமாக்குதல், கேரளத்திற்கு மத்திய சர்க்காரிடமிருந்து ரூ. 200 கோடி வாங்குதல் போன்றவைகள் இனிமேல் சாதிக்கவேண்டிய வேலைகளென கம்யூனிஸ்டு அரசாங்கம் அறிவித்துள்ளது.

இந்தச் சாதனைகளை துண்டுப் பிரசுரங்கள், சுவரொட்டிகள் மூலம் தமிழ் மக்கள் தெரிந்துகொள்ளும்படி செய்வது தமிழ் நாட்டு முற்போக்காளரின் கடமை.

# ஜனசக்தி வளர்ச்சிக்கு ரூ. 2 நன்கொடை

உறையூர், திருச்சி, மே 14— இவ்வூர் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர் வி. திருமலை, "ஜனசக்தி" வளர்ச்சி நிதிக்கு ரூ. 2. நன்கொடையளித்துள்ளார்.

# சாமான், பார்சல் போக்குவரத்து உபரிக் கட்டணம் இரட்டிப்பு

## புதிய ரயில்வே பட்ஜெட் விபரங்கள்

புது டில்லி, மே 15— லோக சபையில் நேற்று ரயில்வே பட்ஜெட்டை சமர்ப்பித்து, ரயில்வே மந்திரி திரு. ஜகஜீவன்ராம் பேசுகையில், 1957 ஜூலை 1 முதல் சாமான்கள், பார்சல் போக்குவரத்துக் கட்டணங்களின்மீதுள்ள உபரி கட்டணத்தை இரட்டிப்பாக்குவதாகத் (6¼ சத விகிதத்திலிருந்து 12½ சத விகிதம்) தெரிவித்தார்.

இப்பொழுதுள்ளது போலவே சில சரக்குகளுக்கு இந்த உபரிக் கட்டணத்திலிருந்து விதிவிலக்கு நீடிக்கும் என்றும் தெரிவித்தார்.

விதிவிலக்களிக்கப்பட்டுள்ள பொருள்களாவன: தான்யங்கள், உளுந்து, பயிறுவகை, தீவனப் பொருள்கள், உரம், கதர், பத்திரிகைகள், பத்திரிகைக் காகிதம், புஸ்தகங்கள் ஆகியவை.

இந்த உபரிக் கட்டண உயர்விலிருந்து சர்க்காருக்கு வருடமொன்றுக்கு சாமான் போக்குவரத்திலிருந்து 11 கோடி 30 லட்சம் ரூபாயும், பார்சல் கட்டணத்திலிருந்து 1 கோடி 20 லட்ச ரூபாயும் அதிகம் கிடைக்கும் என்றும் ரயில்வே மந்திரி கூறினார்.

பிரயாணிகள் கட்டணத்தில் தாம் எந்த மாறுதலையும் செய்யவில்லையென்றும், அதுபற்றி நிதி மந்திரி பரிசீலித்து வருவதாகவும் ஜகஜீவன்ராம் கூறினார்.

அதிகப் போக்குவரத்துக்கு வேண்டிய வசதி செய்வதற்காக ரயில்வே திட்டத்தை கணிசமாக விஸ்தரிப்பது தவிர்க்க முடியாததாகி விட்டதென்றும், அதற்கு அதிகப்படியாய் ரூ. 250 கோடி தேடவேண்டியிருக்கும் என்றும் ஜகஜீவன்ராம் கூறினார்.

**மின்சார மயமாக்கும் திட்டம் விஸ்தரிப்பு**

2வது திட்டத்தில் சுமார் 800 மைல் தூரமுள்ள ரயில் பாதையை மின்சார மயமாக்குவதற்கு 80 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று ரயில்வே மந்திரி கூறினார்.

தென்பிராந்திய ரயில்வேயில் தாம்பரம் முதல் விழுப்புரம் வரையிலும் உள்ள பகுதியும் மின்சாரமயமாக்கப்படும்.

**ரயில்வே சிப்பந்திகள் பற்றி**

ரயில்வே சிப்பந்திகளுக்கு இப்பொழுதுள்ள பிராவிடெண்ட் பண்டு, கிராஜுடிக்குப் பதிலாக, ஓய்வுகாலத்தில்பென்ஷன் பெறும் முறை ஏற்படுத்துவது சம்பந்தமாக சீக்கிரமே ஸ்தாபன ரீதியாக அமைந்த தொழிலாளர் பிரதிநிதிகளுடன்பேச்சுவார்த்தை நடத்த உத்தேசித்திருக்கிறேன், என்று ஜகஜீவன்ராம் தெரிவித்தார்.

நடைமுதல் வருஷத்தில் ரயில்வே சிப்பந்திகளுக்கு 15,000 குவார்ட்டர்ஸ் (குடியிருப்பு இடங்கள்) கட்ட திட்டமிட்டிருப்பதாகவும் ரயில்வே மந்திரி கூறினார்.

# ரயில்வே பட்ஜெட் கண்ணோட்டம்

(கோடி ரூபாய்க் கணக்கில்)

| | 1955-56 நடப்பு விவரம் | 1956-57 திருத்தப்பட்ட மதிப்பீடு | 1957-58 பட்ஜெட் மதிப்பீடு: 1957 மார்ச்சில் பிரேரேபிக்கப்பட்டது | 1957-58 பட்ஜெட் மதிப்பீடு: இப்போது பிரேரேபிக்கப்படுவது |
|---|---|---|---|---|
| மொத்த போக்குவரத்து வருமானம் | 316·29 | 350·00 | 368·50 | 377·90 |
| வேலைச் செலவு | 213·22 | 229·34 | 214·16 | 244·16 |
| நிகர பலவகைப்பட்ட செலவு | 7·73 | 11·02 | 14·12 | 14·12 |
| தேய்மான ரிசர்வ் நிதிக்கு ஒதுக்கப்பட்டது | 45·00 | 45·00 | 45 00 | 45·00 |
| மொத்தம் | 265·95 | 285·36 | 303 28 | 303·28 |
| நிகரரயில்வேவருமானம் | 50·34 | 64·64 | 65·22 | 74·62 |
| பொது ரெவின்யூவுக்கு தரப்படும் ஈவு | 36.12 | 37·69 | 43·79 | 43·79 |
| நிகர உபரி | 14·22 | 26·95 | 21·43 | 30·83 |

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press Madras-1
Editor: P. JEEVANANDAM.